*Teachers (Recruitment)*

* 529 Q.—SRI S. M. ANNAMALAI :
SRI M. P. SARATHI : } கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பள்ளிகளில் உயர் பதவிகளில் சர்க்காரே நேரடியாக ஆசிரியர்களை நியமிக்கும் உத்தேசம் உண்டா?

(ஆ) அப்படியானல், அதன் விபரமென்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No Sir; in the case of posts in Government schools only, the appointments are made by Government or by Officers of the Education Department as the case may be.

(b) Does not arise.

*Engineering graduates*

* 530 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்திலே தற்போது எத்தனை இஞ்ஜினியரின் பட்டதாரிகள் இருக்கிறார்கள்?

(ஆ) மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக இன்னும் எத்தனை இஞ்ஜினியரிங் பட்டதாரிகளுக்குப் பயிற்சி கொடுக்கப்படவேண்டும்?

(இ) வருடந்தோறும் எத்தனை இஞ்ஜினியர் பட்டதாரிகளுக்குப் பயிற்சி கொடுக்கத் திட்டமிடப் பட்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The Government have no information.

(b) It has been estimated that roughly 2,200 degree holders will be required for employment under the State Government.

(c) At present, the sanctioned intake in all the Colleges in the State is 1,157. It is proposed to increase this by 560 more during the Third Plan.

SRI P. G. MANICKAM : அதிகமான இஞ்ஜினியரின் பட்டதாரிகள் தேவையாக இருப்பதனல், இப்பொழுது இருக்கக்கூடிய கல்லூரிகள் போதியதாக இல்லை. ஆகையால் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது அதிக கல்லூரிகள் ஏற்படுத்துவதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிதான் விவாதித்துக்கொண்டிருக்கிறோம். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் போதிய என்ஜினியரிங் கல்லூரிகள் ஏற்படுத்துவதற்கு முயற்சிப்பதாகச் சொன்னேன். இப்பொழுது இருக்கக்கூடிய கல்லூரிகளில் அதிகமான மாணவர்கள் சேர்த்துக்கொள்வதுபற்றி பரிசீலனையில் இருக்கிறது.